இலாகாவையும் நாம் கலந்து ஆலோசித்துத்தான் இந்த "ப்ரையாரிட்டி லிஸ்டு" தயாரித்திருக்கிறோம். எது அவசியம் என்பதையும் எதை முதலிலே எடுத்துக்கொள்ளக்கூடும் என்பதையும் பார்த்துத்தான் லிஸ்டு தயாரிக்கப்பட்டிருக்கிறது.

*School-going children in the Coimbatore district*

* 181 *Q.*—SRI P. G. MANICKAM: Will the Hon. the Minister for Finance be pleased to state the number of children under each age-group 6–11 and 11–14 and the number admitted in schools in the Coimbatore district in 1956–57?

THE HON. SRI C. SUBRAMANIAM: Total number of children in Coimbatore district in 1956–57 :—

(*a*) Under age group 6–11 = 450,955.

(*b*) Under age group 11–4 = 236,214.

Number of children admitted in schools in 1956–57—

(*a*) Under age group 6–11 = 31,975.

(*b*) Under age group 11–14 = 8,101.

**SRI P. G. MANICKAM:** கோயமுத்தூர் ஜில்லாவானது ஆரம்பக் கல்வி விஷயத்தில் மிக மிக பிற்போக்கு நிலைமையிலே இருக்கிறது என்பது சர்க்கார் வெளியிட்டுள்ள வெள்ளையறிக்கையிலிருந்து தெரிகிறது. இந்த ஜில்லாவில், 500 ஜனத்தொகைக்கு மேற்பட்டுள்ள நூற்றுக்கணக்கான கிராமங்களும், குக்கிராமங்களும் இன்னும் பள்ளிக்கூடங்கள் இல்லாமல் இருக்கின்றன. இப்படிப்பட்ட இடங்களிலெல்லாம் பள்ளிக்கூடங்களைத் திறந்து, அங்குள்ள மாணவர்கள் படித்து முன்னேறி வருவதற்கு வசதி செய்ய அரசாங்கம் நடவடிக்கை எடுத்துக்கொள்ளுமா ?

**THE HON. SRI C. SUBRAMANIAM:** கனம் அங்கத்தினர் அவர்கள் மூன்று நான்கு ஆண்டுகளுக்கு முன்பு இருந்த நிலையைப்பற்றி பேசுகிறார்கள் என்று நினைக்கிறேன். 500 ஜனத்தொகையுள்ள நமது ராஜ்யத்தில் உள்ள எல்லா கிராமங்களிலும் பள்ளிக்கூடங்கள் வைத்தாய்விட்டது. கோயமுத்தூர் ஜில்லா மட்டும் விலக்கு அல்ல. ஒரு காலத்தில் கோயமுத்தூர் ஜில்லாவானது ஆரம்பக் கல்வி விஷயத்தில் பிற்போக்காக இருந்தது வாஸ்தவம். ஆனால், இப்பொழுது ரொம்ப முற்போக்கு அடைந்திருக்கிறது.

*Secondary grade teachers*

* 182 *Q.*—SRI N. K. PALANISAMI: Will the Hon. the Minister for Finance be pleased to state—

(*a*) whether the secondary grade teachers employed in elementary schools are allowed full-fee concession for their children; and

(*b*) if so, why such teachers are allowed only half-fee concession for their children when employed in high schools?

THE HON. SRI C. SUBRAMANIAM: (*a*) The children of secondary grade teachers employed in elementary schools get full-fee concession up to Form VI as such teachers enjoy comparatively a lower status in pay, etc.

3rd March 1958]

(*b*) The children of such teachers employed in secondary schools get full-fee concession up to Form III and half-fee concession from Form IV to VI. The difference in treatment has been necessitated by the policy of conferring certain benefits to low paid employees of **elementary** schools and encouraging teachers to take up work in elementary schools.

**SRI N. K. PALANISAMI** : ஒரே கிரேடிலிருக்கும் உபாத்தியாயர்களுடைய குழந்தைகளுக்கு ஒரேவிதமான கல்விச் சலுகை கொடுப்பதில் என்ன கஷ்டம் இருக்கிறது ?

**THE HON. SRI C. SUBRAMANIAM** : சலுகை கொடுப்பதிலே கஷ்டம் என்னவென்ருல் பணக் கஷ்டம் தான். அதுவும் தவிர, செகண்டரி கிரேடு பயிற்சி பெற்ற ஆசிரியர்கள் ஆரம்பப் பள்ளிகளிலே போய் வேலை செய்யும்போது, அவர்களுக்கு ஒரு தூண்டுதல் காட்டவேண்டுமென்பதற்காக அவர்களுடைய குழந்தைகளுக்கு 6-வது படிவம் வரை முழுச் சம்பளச் சலுகை கொடுக்கப்படுகிறது.

MR. SPEAKER : Questions are over.

[*Note.*—**An asterisk (*) at the commencement of a speech indicates revision by the Member.**]

## II.—ANNOUNCEMENT BY THE HON. SPEAKER.

MR. SPEAKER : I have to inform the House that under rule 155 (3) of the Assembly Rules, notices of cut motions should reach the Secretary, Legislature Department before 3 p.m. on Wednesday, the 5th March 1958. No exception will be made to this rule on any account.

## III.—GENERAL DISCUSSION ON THE BUDGET FOR THE YEAR 1958-59.

**MR. SPEAKER** : இப்பொழுது ஆறு நாட்களுக்கு பட்ஜெட் மீது பொது விவாதம் நடத்தப்படும். மூன்று நாட்களுக்கு முன்னுல் கூடிய பிஸினஸ் அட்வைஸரி கமிட்டியில், 8-ந் தேதியன்று கனம் ஸ்ரீ அண்ணுதுரை அவர்களும், கனம் ஸ்ரீ வி. கே. ராமசாமி முதலியார் அவர்களும், கனம் நிதி மந்திரி அவர்களும் கலந்துகொள்வதாகத் தீர்மானிக்கப்பட்டது. பாக்கி கட்சித் தலைவர்கள் எல்லோரும் 7-ந் தேதியன்று பேசுவார்கள். மந்திரிமார்கள் அவரவர்களுக்கு எப்பொழுது இஷ்டம் இருக்கிறதோ அப்பொழுது கலந்துகொள்ளலாம். இன்றையதினம் கனம் அங்கத்தினர் ஸ்ரீ எம். ஜகன்னுதன் அவர்களை விவாதத்தை ஆரம்பிக்குமாறு கேட்டுக்கொள்ளுகிறேன். ஸ்ரீ ஜகன்னுதன் அவர்கள் 20 நிமிஷங்கள் பேசலாம். அதற்குப் பிறகு கனம் அங்கத்தினர் ஸ்ரீ க. அன்பழகன் அவர்கள் 20 நிமிஷங்கள் பேசலாம். சாதாரணமாக கனம் அங்கத்தினர்கள் தங்களுடைய பிரசங்கத்தை 10 முதல் 20 நிமிஷங்களுக்குள் முடித்துவிட்டால் நன்ருக இருக்கும் என்பது என்னுடைய அபிப்பிராயம்.

**SRI K. R. NALLASIVAM** : பாயின்ட் ஆப் ஆர்டர், ஸர். நிதி மந்திரி அவர்கள் உரையில் டி.டி.கே. அவர்கள் சம்பந்தமாக பேசியிருக்கிருர்கள். டி.டி. கே. அவர்கள் தகராறுக்குரிய முறையிலே தம்முடைய பதவியை ராஜீனுமா செய்திருக்கிருர்கள். அதைப்பற்றிய எல்லா விஷயங்களையும் நாம் இந்தச் சபையில் விவாதிக்கக்கூடிய ஒரு சூழ்நிலை இருந்து, நிதி அமைச்சர் அவர்கள் அதைப்பற்றி பிரஸ்தாபித்திருந்தால் ஆட்சேபனையில்லை. நிதி அமைச்சர் அவர்கள் குறிப்பிட்டிருக்கும் இது விஷயம் பற்றி நாம் விரிவாக விவாதிப்பதற்கு ஒரு சந்தர்ப்பம் கொடுக்கப்படுமா என்பதை கனம் சபாநாயகர் அவர்களிடமிருந்து தெரிந்துகொள்ள விரும்புகிறேன்.